**திரு. அ. சேனுபதி கவுண்டர் :** இந்த செஸ் புதிதாக ஏற்படுத்தப்பட்டது. கூட்டுறவு சர்க்கரை ஆலைகளிலே லாபம் கிடையாது. ஆகவே அவைகளுக்கு இந்த வரியிலிருந்து விதிவிலக்கு அளிக்கப்படுமா ?

**கனம் திரு. பூ. கக்கன் :** கூட்டுறவு சர்க்கரை ஆலைகளில் லாபம் இருக்கிறதா, இல்லையா என்பது எனக்குத் தெரியாது. அதைப் பற்றி பரிசீலனை செய்யவேண்டும்.

**திரு. மு. சண்முகம் :** இந்த செஸ் தொகை கரும்பு விவசாயிகளிடமிருந்து வசூலிக்கப்பட்டதா, அல்லது ஆலை முதலாளிகளின் நிதியிலிருந்து வசூலிக்கப்பட்டதா ?

**கனம் திரு. பூ. கக்கன் :** இந்த செஸ் ஒரு டன்னுக்கு 2 ரூபாய் என்று வசூலிக்கப்பட்டது. ஆலையிலிருந்து வசூலிக்கப்பட்டதா அல்லது ஏற்றுமதி செய்கிறவர்களிடமிருந்து வசூலிக்கப்பட்டதா என்ற தகவல் தற்சமயம் என்னிடம் இல்லை. தனியாகக் கேள்வி போட்டால் பதில் சொல்லப்படும்.

### ராசிபுரம் குடிநீர் வழங்கும் திட்டம்

*81 **கேள்வி.—திரு. நா. பா. செங்கோட்டுவேலு :** கனம் சுகாதார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ராசிபுரம் நகரத்திற்கு பனமரத்துப்பட்டி தண்ணீரை உபயோகித்துக்கொள்ள அரசாங்கம் அனுமதி வழங்கியிருக்கிறதா ?

(இ) அப்படியானல், எப்போது வேலை துவங்கப்படும் ?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : (a) & (b) The Government have not yet decided upon the source from which water-supply should be given to Rasipuram. The Chief Engineer, Public Works Department (General), has suggested the Panamarathupatti source, subject to certain conditions and submitted outline proposals and estimates for the scheme. The matter is under examination.

**திரு. நா. ப. செங்கோட்டுவேலு :** ராசிபுரம் நகரசபையிலிருந்து அரசாங்கத்திற்கு ஏதாவது தகவல் வந்ததா ?

**கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம் :** ராசிபுரத்திலிருந்து தகவல் எதிர்பார்க்கப்படுகிறது.

**திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி :** ராசிபுரத்திலே தண்ணீர்ப் பஞ்சம் ஒவ்வொரு ஆண்டும் இருப்பதாக நான் அறிகிறேன். ஆகவே ராசிபுரத்திற்காக ஒரு தண்ணீர்த் திட்டத்தை சர்க்கார் தனியாகப் பரிசீலித்து, ஏதாகிலும் ஒரு நிரந்தரமான முடிவுக்கு வருவார்களா ? அப்படி தண்ணீர் கொடுக்க முடியவில்லை என்றால், குழாய்க் கிணறுகள் மூலம் குடிநீர் வழங்குவதற்கு ஆவன செய்வார்களா என்று அறியவிரும்புகிறேன்.

2nd July 1962]

**கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம்:** ராசிபுரம் முனிசிபல் கமிஷனருக்கு இதைப்பற்றி தகவல் அறிவிக்கப்பட்டிருக்கிறது அங்கிருந்து பதில் எதிர்பார்க்கப்படுகிறது.

**திரு. சோ. ஆறுமுகம்:** பனைமரத்துப்பட்டித் தண்ணீரை ராசிபுரத்திற்குக் கொண்டுபோகவேண்டுமென்று சொல்லப்படுகிறது. அங்கேயுள்ள விவசாயிகள் அந்தத் தண்ணீரைப் பயன்படுத்த வேண்டாமென்று சொல்லியிருக்கிறார்களா?

**கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம்:** அதைப்பற்றி இப்பொழுது என்னிடம் தகவல் இல்லை.

*University colleges (opening)*

***86 Q.—SRI K. MOOKIAH THEVAR:** Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have received any proposal from the University for the establishment of Uuniversity Colleges in the State; and

(*b*) if so, the action taken thereon?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM:** (*a*) No, Sir.

(*b*) Does not arise.

**தீ விபத்துக்கள்**

***86-பி. கேள்வி.—திரு. து. ப. அழகமுத்து:** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1959-60, 1960-61, 1961-62 ஆண்டுகளில் திருச்சி மாவட்டத்திலுள்ள பெரம்பலூர், முசிரி தாலுகாக்களில் எத்தனை தீ விபத்துக்கள் ஏற்பட்டன?

(இ) பெரம்பலூரிலாவது துறையூரிலாவது ஒரு தீயணைக்கும் படை வைக்கும் உத்தேசம் உண்டா?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM:** (*a*)—

| | 1959-60. | 1960-61. | 1961-62. |
|---|---|---|---|
| Perambalur taluk .. | 8 | 12 | 12 |
| Musiri taluk .. .. | 9 | 12 | 14 |

(*b*) No, Sir.

**திரு. து. ப. அழகமுத்து:** பெரம்பலூர் தாலுகாவிலும் முசிரி தாலுகாவிலும் அடிக்கடி தீ விபத்துக்கள் ஏற்படுகின்றன. திருச்சி ஜில்லாவில் காவேரிக்குத் தெற்கேதான் தீயணைக்கும் படை வைக்கப்பட்டிருக்கிறது. தீ விபத்துக்கள் ஏற்படும் பொழுது, வெகு தூரத்திலிருந்து இந்தப் படை வரவேண்டியிருப்பதால், தீ அணைப்பதற்கு முடியாமல் போகிறது. ஆகவே காவேரிக்கு வடக்கேயும் ஒரு தீ அணைக்கும் படையை நிறுவ அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா?